REGD. No. TN-MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு



நல்லவு!
அரசியல் கட்சிகள் என்ற எண்ணம் ஏற்பட்டதே நல்லவர்கள் அரசியலில் ஈடுபடமுடியும். அரசியலை நல்லதாக ஆக்க முடியும் என்ற நம்பிக்கை வந்த பிறகுதான்.
—பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

சுத்தம்
மண்தரையை அழகு செய்யாவிட்டாலும் அதை அசுத்தம் செய்யாமலாவது இருக்க வேண்டும்.
—காந்தியடிகள்



மலர்: 6 சென்னை 27—10—1981 செவ்வாய் வெளியூர் 28—10—1981 புதன் இதழ்: 11

புரட்சித்தலைவர் ஆட்சியில் தொழில் வளர்ச்சி:

# புதுக்கோட்டையில் ரூ. 6 கோடி செலவில் புதிய நூற்பாலை

**சென்னை, அக். 27—புதுக்கோட்டை மாவட்டத்தில் ரூ. 6 கோடி செலவில் ஒரு நூற்பாலையும், ரூ. 50 லட்சம் செலவில் விசைத்தறி இணையம் ஒன்றும் அமைக்கப்பட உள்ளது.**

புரட்சித்தலைவரது ஆட்சியில் தொழில் வளர்ச்சி பெற பல்வேறு திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

அந்த அடிப்படையில் புதுகை மாவட்டத்தில் தொழில் வளர்ச்சி ஏற்பட்டு வருவதாக அமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்தார்.

அமைச்சர் திருநாவுக்கரசு கூறியதாவது:—

புரட்சித்தலைவர் ஆட்சிப் பொறுப்பேற்ற பிறகு தமிழகத்தில் 24 புதிய தாலுகாக்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

## 7 புதிய தாலுகா

அவைகளில் புதுகை மாவட்டத்தில் மட்டும் 7 புதிய தாலுகாக்கள் இடம் பெற்றுள்ளன.

மக்களது வசதியைப் பொறுத்து இப்படி புதிய தாலுகாக்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

புதுகை மாவட்டத்தில் தன்னிறைவுத் திட்டத்திற்காக ரூ. 61.1 லட்சம் ஒதுக்கப்பட்டு செலவிடப்பட்டுள்ளது.

தொழில் துறையில் கணிசமான அளவு புதுகை மாவட்டம் முன்னேறி வருகிறது.

ஒருகோடி ரூபாய் மதிப்பீடுள்ள பொட்டாசியம் குளோரைடு தொழிற்சாலை ரூ. 2 கோடி மதிப்புள்ள டி.வி.எஸ். பாடிகள்கட்டும் தொழிற்சாலை முதலிய தொழில்கள் இயங்கி வருகின்றன.

60 ஏக்கர் பரப்பில் தொழில் இணையம்ஒன்றும் புதுகை மாவட்டத்தில் துவக்கப்படவுள்ளது.

## புதிய நூற்பாலை

புதிய தொழில்களுக்கு 5 ஆண்டுகட்கு மின்வெட்டு இராது.

ரூ. 6 கோடி செலவில் நூற்பாலை ஒன்று அமைக்கப்பட உள்ளது. ரூ. 50 லட்சம் செலவில் பவர்லூம் இணையமும் அமைக்கப்படவுள்ளது.

தன்னிறைவுத் திட்டம் மூலம் மின்வசதி, சாலை வசதி, பள்ளிகள் மற்றும் பல்வேறுவசதிகள்செய்யப்பட்டு வருகின்றன.

## உதவித் திட்டங்கள்

முதியோர் உதவித் தொகை, விதவைகளுக்கு உதவித்தொகை, உடல் ஊனமுற்றோருக்கு உதவி இப்படி சமுதாயத்தில் நலிந்த பிரிவினருக்கு புரட்சித்தலைவர் அரசு பல்வேறு உதவிகளைச் செய்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.



திருநாவுக்கரசு

புதுக்கோட்டையில் (6-ம் பத்தி பார்க்க)

பம்பாய் அருகே

## சென்னை ரெயில் தடம் புரண்டது

பம்பாய், அக். 27—பம்பாய்க்கு சென்று கொண்டிருந்த சென்னை—பம்பாய் மெயில் புனா-பம்பாய் ரெயில் பிரிவில் காண்டலா-மக்சிஹில் ரெயில் நிலையங்களுக்கு இடையே தடம் புரண்டது.

ரெயில் தொடரின் இறுதியிலிருந்த 7ரெயில் பெட்டிகள் தடம் புரண்டன. இன்று அதிகாலை 2.30 மணியளவில் இவ்விபத்து நடந்தது. இந்த விபத்தில், யாருக்கும் காயம் ஏற்படவில்லை என்று கூறப்படுகிறது.

மீட்பு ரெயில்கள், வைகுலா மற்றும் கல்யாண் ரெயில் நிலையங்களில் இருந்து சென்றுள்ளது.

தடம்புரளாத ரெயில் பெட்டிகள் மட்டும் இன்று காலை 6 மணிக்கு விபத்து நடந்த இடத்தில் இருந்து பம்பாய்க்குப் புறப்பட்டுச் சென்றது.

தடம் புரண்ட ரெயில் பெட்டிகளில் இருந்தபயணிகள் பம்பாய் சென்றமினார் எக்ஸ்பிரஸ் ரெயிலில் அழைத்துச் செல்லப்பட்டனர்.

# கடலோரப் பகுதி மக்கள் உஷார்

# மழைவலுக்கும்

## இரண்டு நாட்களாக தமிழகம் முழுவதும் இடைவிடாத மழை

**சென்னை, அக் 27- வடகிழக்கு பருவ மழையின் விளைவாக தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் தொடர்ந்து பலத்த மழை பெய்து வருகிறது.**

அடுத்த 48 மணி நேரத்தில் மேலும் தொடர்ந்து பலத்த மழை பெய்யும் என வானிலை முன்னறிவிப்பு நிலையம் அறிவித்துள்ளது.

வடகிழக்கு பருவ மழையின் விளைவாக, தமிழகத்தின் கடலோர மாவட்டங்களில் கடந்த 4நாட்களாக விட்டு விட்டு பலத்த மழை பெய்து வருகிறது.

வங்கக்கடலில் உருவாகியுள்ள காற்று அழுத்த மண்டலம் தொடர்ந்து ஒரே இடத்தில் நிலைக் கொண்டிருப்பதால் தொடர்ந்து பலத்த மழை பெய்து வருகிறது.

## சென்னை நகரில்..

சென்னை நகரில், கடந்த 48 மணி நேரத்தில் பலத்த மழை பெய்துள்ளது.

தொடர்ந்து விட்டு விட்டு மழை பெய்து வருகிறது.

வடசென்னையில் சில பகுதியில் பலத்த மழையின் விளைவாக தாழ்வான பகுதிகளில் தண்ணீர் தேங்கியது.

சென்னை மாநகராட்சி தனி அதிகாரி முருகராசுவும் கமிஷனரும் மற்றும் அதிகாரிகளும், மழையால் பாதிக்கப்பட்ட பகுதிகள் ஏதேனும் உள்ளதா என நகர் முழுவதும் சுற்றிப்பார்த்தனர்.

மேலும் மழை பெய்தாலும் தாழ்வான பகுதிகளில் வசிக்கும் மக்கள் பாதிக்கப்படாமல் இருக்கவும், வெள்ளத் தண்ணீர் அதிகரித்தால் மக்களை பாதுகாப்பான இடத்திற்கு கொண்டு செல்லவும், மாநகராட்சி தயாராக உள்ளதாகவும், மாநகராட்சி அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

## மதுரை

மதுரை, ராமநாதபுரம் மாவட்டங்களிலும் தொடர்ந்து பலத்த மழை பெய்து வருகிறது.

மேற்கண்ட மாவட்டங்களில்உள்ளபெரும்பாலான ஏரிகள் நிரம்பிவிட்டன.

தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை மாவட்டங்களிலும்பலத்த மழை பெய்து வருகிறது.

## எச்சரிக்கை

அடுத்த 48 மணி நேரத்தில் பாண்டிச்சேரி மற்றும் தமிழ்நாட்டின் கடலோர மாவட்டங்களில் பலத்த மழை பெய்யக் கூடும் என வானிலை முன்னறிவிப்பு நிலையம் அறிவித்துள்ளது. தமிழ்நாடெங்கும், பரவலாக விட்டு விட்டு பலத்த மழை பெய்யக் கூடும் எனவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

காரைக்கால், பரங்கிப் பேட்டை, நாகப்பட்டினம், கும்பகோணம், மாயவரம் ஆகிய இடங்களில் இன்று காலை பலத்த மழை பெய்துள்ளது.

தொடர்ந்து பலத்த மழை பெய்து வருவதால், மாவட்டக் கலெக்டர்கள் தகுந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுக்குமாறு அரசால் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## பாகிஸ்தான் பம்மாத்து: இந்திரா கருத்து



புதுடெல்லி, அக். 27—வெளிநாடுகளில் 10 நாட்கள் சுற்றுப் பயணம் செய்து விட்டு இன்று டெல்லி திரும்பிய பிரதமர் இந்திரா நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:-

இந்தியாவுடன் போர் தொடுக்கமாட்டோம் என்று எழுதித்தரத்தயார் என்று பாகிஸ்தான் அதிபர் ஜியாஉல்ஹக் அறிவித்திருப்பதால் நிலைமையில் எந்தவித மாற்றமும் ஏற்பட்டுவிடப் போவதில்லை.

இதே போல 1949ல் இந்தியாவும் கூறி இருந்தது. அதைத் தொடர்ந்து மற்றபிரதமர்களும் வாக்குறுதி அளித்திருந்தனர்.

"போர் இல்லை" என்று பாகிஸ்தான் பேசுகிற அதே நேரத்தில் நவீன போர்க்கருவிகளையும் வாங்கிக் குவித்துக் கொண்டிருக்கிறது.

இவ்வாறு பிரதமர் இந்திரா கூறினார்.

# காதல் தோல்வியால் தனக்குத்தானே சுட்டு போலீஸ்காரர் சாவு

சென்னை, அக். 27— காதலில் தோல்வி ஏற்பட்டதால் போலீஸ்காரர் ஒருவர் தனக்குத் தானே துப்பாக்கியால் சுட்டு தற்கொலை செய்து கொண்டார்.

இதுபற்றிய விவரம் வருமாறு:-

செங்கற்பட்டு மாவட்டம் கும்முடிப்பூண்டி அருகேயுள்ள சாமிரெட்டி பாளையத்தைச் சேர்ந்தவர் மதுரை. வயது 26. இவர் பரங்கிமலையில் ஆயுதப்படை போலீஸ் காரராக வேலை பார்த்து வந்தார்.

இவர் ஒரு பெண்ணைக் காதலித்ததாகவும், ஆனால் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்ய அவரது பெற்றோர் எதிர்ப்புத் தெரிவித்ததாகவும் கூறப்படுகிறது.

தீபாவளிக்காக மதுரை தனது சொந்த ஊருக்குச் சென்றார். அங்கு தனது திருமண விஷயம் பற்றி பெற்றோரிடம் வற்புறுத்தியதாகவும், ஆனால் காதல்திருமணத்துக்கு அவரது பெற்றோர் எதிர்ப்புத் தெரிவித்ததாகவும் கூறப்படுகிறது.

இதனால்விரக்தியடைந்த மதுரைநேற்று பரங்கிமலைக்குத்திரும்பினார். வேலைக்குச் செல்வதாகக் கூறிச் சென்றவர் அங்கு துப்பாக்கியால் தனது வயிற்றில் சுட்டுக் கொண்டு பரிதாபமாக இறந்தார். இது குறித்து விசாரணை நடைபெற்றுவருகிறது.

## பிரதமர் இந்திரா டெல்லி திரும்பினர்

புதுடெல்லி, அக். 27—ருமேனியா, கனடா, மெக்சிகோ, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் 10 நாள் சுற்றுப்பயணம் செய்த பிரதமர் இந்திராகாந்தி இன்று பிற்பகல் டெல்லி திரும்பினர். மெக்சிகோவில் கான்குன் என்ற இடத்தில் நடந்த ஏழை - பணக்கார நாடுகள் மாநாட்டில் இந்திரா பங்கேற்றார்.

டெல்லி விமான நிலையத்தில மத்தியஅமைச்சர்கள், வெளிநாட்டுத் தூதர்கள், முப்படைத் தளபதிகள். டெல்லி கவர்னர் குரானா ஆகியோர் பிரதமரை வரவேற்றனர்.

நட்புறவு கழக விழா:

# கி. ஜெர்மனியில் தமிழ் பரவ வகை செய்க: கே.ஏ.கே. கோரிக்கை

சென்னை, அக். 27— கிழக்கு ஜெர்மனியில் தமிழ்பரவ வகை செய்யுமாறு இந்திய-ஜெர்மன் நட்புறவுக் கழகத்தை அமைச்சர் கே.ஏ.கே. கேட்டுக்கொண்டார்.

இந்திய — ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு நாடுகளின் நட்புறவுக் கழகம், மற்றும் சென்னையிலுள்ள ஜெர்மனியர் சங்கம் ஆகியவற்றின் சார்பில் நட்புறவு சங்க பொதுச்செயலாளர் டாக்டர் க்யெந்தர் மற்றும் ஜெர்மன் பத்திரிகையாளர் ரோல்ப் ஆல்டஸ் ஆகியோருக்கு வரவேற்பு விழா சென்னையில் நடந்தது.

ஊரகத் தொழில் அமைச்சர் கே. ஏ. கே., இவ்விழாவிற்குத் தலைமை வகித்தார். அவர் பேசுகையில் கூறியதாவது:-

குடியரசு உரிமை பெற்ற 32 ஆண்டுகளுக்குள் ஜெர்மன் ஜனநாயக குடியரசு விஞ்ஞானம் மற்றும் தொழில் நுட்பத்துறையில்அபரிமிதமான வளர்ச்சி பெற்றிருப்பதுபாராட்டுக்குரியது தொழில் வளம் மிகுந்து தனி நபர் வருமானம் அதிகரித்து முன்னணிநாடுகளில் ஒன்றாக திகழ்கிறது.

ஜெர்மனியில் செய்யப்படும் மின்சார டைப்ரைட்டர் போன்ற பல வகை கருவிகள் உலகில் பெரும் கிராக்கி உள்ளவையாகும்.

இந்தியா மீது மிகவும் பற்றுக்கொண்ட மக்கள் அங்கே உள்ளனர். அங்குள்ள 12 பிரசுர நிலையங்கள் இந்திய மொழி நூல்களை அச்சிடுகின்றன. திருக்குறள் சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி போன்றவை ஜெர்மன் மொழியில் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவர்கள்பல்கலைக் கழகங்களில் உலகின் தொன்மை மொழியான தமிழ்பயிற்றுவிக்க ஆவன செய்யவேண்டுகிறேன்.



இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. ஆங்கிலத்தில் உரை நிகழ்த்தினார்.

டாக்டர் க்யெந்தர் பேசுகையில் "பெர்லினில் உள்ள ஹன்போல்ட் பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறை ஒன்று செயல்பட்டு இருக்கிறது" என்று தெரிவித்தார்.

திருமதி மீனலாமோசஸ் நன்றி கூறினார்.

(3—ம் பத்தி தொடர்ச்சி

நடந்த ஒரு விழாவில் பல்வேறு உதவித திட்டங்களை அமைச்சர் திருநாவுக்கரசு வழங்கினர்.

புதிதாக ஆறு பேருக்கு முதியோர் உதவித்தொகை 500 பேர்களுக்கு நிலப் பட்டா, 501 பேர்களுக்கு மனைப்பட்டா, கலப்பு மண தம்பதிகள் 3 ஜோடிகளுக்கு தலா ரூ. 5ஆயிரம், 24பேர்களுக்கு கறவை மாடுகள் வாங்க உதவித்தொகை மற்றும் பல உதவித் தொகைகளை நலிந்த மக்களுக்கு வழங்கினர்.

ஆண்டுக்கு 40 ஆயிரம் வண்டிகள்:

ரூ 56 கோடியில்

## அசோக் லேலண்ட் விரிவாக்க திட்டம்

சென்னை, அக். 27—ஐம்பத்தாறு கோடி ரூபாய் செலவில் அசோக்லேலண்ட் தொழிற்சாலை விரிவாக்கம் செய்யப்படுகிறது.

ஆண்டு ஒன்றுக்கு 15 ஆயிரம் வண்டிகள் என்று இருக்கும் எண்ணிக்கை இதன் மூலம் 40 ஆயிரமாக உயரும்.

அந்நிய செலாவணியாகப் பெறும் ரூ. 56 கோடியில் இருந்து இயந்திரங்கள் வரவழைக்கப்படும்.

இதற்கான ஒப்பந்தத்தில் அசோக் லேலண்டு மானேஜிங் டைரக்டர் ஆர். கே. ஷஹானியும் வாஷிங்டன் இண்டர்நேஷனல் பைனான்ஸ்கார்ப்பரேஷனை சேர்ந்த பிரதிநிதிகளும் கையெழுத்திட்டனர்.

# குடிகார கழுதை வெறியாட்டம் குதறித் தள்ளிப் பேயாட்டம்

நாகர்கோயில், அக். 27—காசுகொடுக்காமல் ஓசியில் கள்ளைக் குடித்து ஒரு கழுதை தெருவில் களியாட்டம்போடதுவங்கியது போதையோடு, பாதையில் வந்தவர்களை யெல்லாம் கடித்துக் குதறியது.

இந்தச் சம்பவம் குமரி மாவட்டத்தில் ஆரல்வாய் மொழி என்ற இடத்தில் நடந்தது.

இந்தச் சம்பவம் பற்றிய விவரம் வருமாறு!—

நாகர்கோயிலிலிருந்து 13 கிலோமீட்டர் தொலைவில் ஆரல்வாய்மொழி இருக்கிறது.

ஆரல்வாய்மொழிக்கு அருகே கிறிஸ்து நகர் கிராமத்துக்கு கழுதை ஒரு கள்ளுக்கடை பக்கமாக காலை வேளையில் நடந்து சென்றது.

கடையில் இருந்தவர்கள் தூங்கிக்கொண்டு இருந்தனர். இந்தக் கழுதையோ நைசாக கடைக்குள் சென்றது. கள் வாசனை கமகமவென்று இழுத்தது.

பானையில் இருந்த கள்ளை வயிறுமுட்டும் அளவு குடித்துத் தீர்த்தது. காசு கொடுக்காமல் ஓசியில் கள் கிடைத்த மகிழ்ச்சி.

கள்ளுண்ட கழுதைசிங்க நடை போட்டு தெருவில் நடக்க ஆரம்பித்தது.

உள்ளே போன "கமகம கள்" வேலை செய்யத் தொடங்கியது. போதை அதன் உடல் முழுவதும் ஏறியது.

அவ்வளவு தான் ரேஸ் மைதானத்தில் ஓடும் குதிரைபோல கழுதைக் குரலையும் இசைத்தவாறு படுவேகமாக ஓடத் தொடங்கியது.

கள்ளுண்டு போதை கொண்ட கழுதை வழியில் வந்தவர்களை எல்லாம் கடித்துக் குதறத் தொடங்கியது.

வழியில் வந்தவர்கள் எல்லாம் பயந்து ஓங்காரக் குரல் எழுப்பி ஓடினர்கள்.

ஆனாலும் கழுதை விடவில்லை. ஐவரைக கடித்துக் குதறிவிட்டது. இந்த ஐவரும் பிறகு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர்.

கழுதையின் அட்டகாசம் கண்ட பொதுமக்கள் அதைத் துரத்திப் பிடித்துக் கயிற்றால் மரத்தில் கட்டினர்கள்.

பயந்து ஓடியவர்கள் அப்பாடா என்று மூச்சு விட்டனர். மரத்தில் கட்டப்பட்ட கழுதையோ ஓடிய காரணத்தால் மூச்சு இரைக்க நின்றது.

அரசவைக் கவிஞராக நியமித்து கண்ணதாசனுக்குப் பெருமை சேர்த்த

# கழக அரசுக்கு தமிழினம் நன்றி செலுத்த கடமைப்பட்டிருக்கிறது

## கவியரசர் மறைவுக்கு அனுதாப கூட்டத்தில் அனைத்துக் கட்சியினர் பேச்சு

சென்னை, அக். 27- கவியரசர் கண்ணதாசனை அரசவைக் கவிஞராக்கிப் பெருமை சேர்த்த கழக அரசுக்கு தமிழினமே நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறது என்று அனைத்துக் கட்சியினர் பங்கேற்ற அனுதாபக்கூட்டத்தில் கூறப்பட்டது.



சென்னை நகர மக்களின் சார்பில் கவியரசு கண்ணதாசனுக்கு இரங்கல் தெரிவிக்கும்கூட்டத்தை ஷெரீப் டாக்டர்ரெக்ஸ் கூட்டினார். இக்கூட்டத்தில் கலந்து கொண்டுஅனைத்துக்கட்சித் தலைவர்களும் பேசினர்.

### இலங்கை அமைச்சர் ராஜதுரை

இலங்கை அமைச்சர் ராஜதுரை பேசுகையில் கூறியதாவது:

தமிழகத்தின் இலக்கிய பூச்சோலையில் தென்றல் வீசிய காலம்—முதல்முதல் மட்டகளப்பு முத்தமிழ் விழாவில் பேச கவிஞரை அழைத்திருந்தேன். ம.பொ.சி.யும் வந்திருந்தார்.

ஓட்டலில் தங்குவதாக கண்ணதாசன் சொன்னார். என் வீட்டில் தங்குமாறு கேட்டுக்கொண்டேன். வீட்டில் இருந்த நூலகத்தைப் பார்த்து விட்டு நான் இங்கேயே இருந்து விடுகிறேன் என்றார்.

அன்று 28 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கிய உறவு பிரிக்க முடியாத உறவோ என்று எண்ணும் வகையில் இருந்தது. அன்றைக்கு ஒன்றரை வயதுக் குழந்தையாக இருந்த என் மகள் பூங்கோதைக்கு தமிழகத்தில் கார்டியனாக இருந்தவர் கண்ணதாசன். இன்று அவள் டாக்டராக படித்து முடித்துவிட்டு வெளியே வர இருக்கிறாள்.

இந்து சமயம் கோவணம் கட்டிய சாமியார் சமயம் என்று சொன்ன போது சுவாமி விவேகானந்தர் சிகாகோவில் இந்து சமயதத்துவத்தைச் சொன்னார். அந்த இடத்தில் கவிஞர் மறைந்திருக்கிறார். நமக்கு அவரது மறைவு பெருமையை உணர்த்துகிறது.

இவ்வாறு ராஜதுரை கூறினார்.

### எதிர்க்கட்சி தலைவர் அமிர்தலிங்கம்

இலங்கை எதிர்க்கட்சித் தலைவர் அமிர்தலிங்கம் பேசுகையில்கூறியதாவது:

இறந்தவர்களையெல்லாம் அமரர்களாகக் கருதி ஆறுதல் பெறுவது தமிழ் மக்கள் மரபு. அவர்களின் பெயரின் முன்பு அமரர் என்று போட்டு இறக்காமலிருப்பதாக கருதியிருக்கிறோம்.

தமிழுக்குத் தொண்டு செய்தவர்கள் சாவதில்லை; தமிழ் கவிஞன் பாரதிதானா செத்ததுண்டோ என்று பாவேந்தர் பாரதிதான் பாடினார்.

அதுபோல தன் தமிழ்க் கவிதைகளைத்தந்த கண்ணதாசன் நம்மை விட்டு மறையவில்லை.

உலகம்முழுவதும் உள்ள பல்வேறுநாடுகளில்வாழும் தமிழ் மக்களுக்கு அவர் விட்டுச் சென்ற சொத்து கவிதை. அதற்காக அவருக்கு தமிழினமே நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கிறது.

இலங்கை மக்களின் சார்பில் கவியரசுக்கு நன்றி சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன்.

பாரதியை பட்டினி போட்டு சாகடித்தது தமிழினம். அதுபோல் கவியரசுக்கு ஏற்படாமல் அவரது வாழ்நாளிலேயே அரசவைக் கவிஞராக ஆக்கிய தமிழக அரசுக்கு தமிழினமே நன்றி செலுத்த கடமைப் பட்டிருக்கிறது.

இறந்தும் இறவாத கண்ணதாசனின் குடும்பத்திற்கு எனது அஞ்சலியை செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இவ்வாறு அமிர்தலிங்கம் கூறினார்.

### மாணிக்கம்

இந்தியக் கம்யூனிஸ்டு கட்சி சார்பில் பா.மாணிக்கம் பேசுகையில் கூறியதாவது:—

இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த கவிஞர்களில் கண்ணதாசன் ஒருவர்.

அவர் சினிமா கவிதை எழுதியபோதும் ஏழை எளிய மக்களைப் பாட வைத்தது மட்டுமல்லாமல் தத்துவ கீதங்களைப் பாட வைத்தார் கண்ணதாசன்.

சினிமாவுக்கு என்று எழுதியது என்றாலும் "சித்தர் கவிதை வழியிலும் செட்டி நாட்டுப்பெண்களின் ஒப்பாரியும் தான் எனக்கு ஊக்கம் அளித்தது" என்றார் கண்ணதாசன். சித்தர் பாடலும் செட்டி நாட்டுப் பெண்களின் ஒப்பாரியும் தமிழ்வழி வந்தது தான்.

கண்ணதாசன் அடிக்கடி பிறப்பதில்லை. அவன் வழி நமக்கு ஏற்பட நல்ல கவிஞர்களை நாம் போற்றுவோம்.

இவ்வாறு பா.மாணிக்கம் கூறினார்.

### குமரி அனந்தன்

காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் தலைவர் குமரிஅனந்தன் பேசுகையில் கூறியதாவது:—

கண்ணதாசன் பொன்விழா கொண்டாடியது நினைவிருக்கிறது. அவருக்கு முதல்வர் பொன்முடிப்பு கொடுத்ததும் அவரது பாடல்கள் எத்தனையோ ஆண்டு காலம் சாகாமலிருக்கும் என்பதற்கு சான்றாக "அச்சம் என்பது மடமையடா..." என்ற பாடலை ஒலிபரப்பியதையும் நினைவு கூர்கிறேன்.

கண்ணதாசனைப் பிடிப்பது கடினம். பிடித்து உட்கார வைத்தால் கவிதை யில்லை மூழ்கி கிடப்பார். அதன் பின்பு உடனே பாடலைச் சொல்லுவார். தமிழன்னை அதில் கொஞ்சுவாள். சொற்கள் அவரை நாடிவரும்.

வற்றிப்போன காம்புகளைப் பிடித்து இழுத்துக் கொண்டிருந்த போது நமக்குக் கிடைத்த காமதேனுபோய்விட்டதே என்ற எண்ணம் ஏற்படுகிறது.

மதத்தை சாடியவரிடம் தான் அர்த்தமுள்ள இந்து மதமும் ஏசு காவியமும் தேடி வந்தது. அந்தஅளவு தமிழ் அவரிடம் இருந்தது.

தமிழ் உள்ளளவும் அவர் இருப்பார்.

இவ்வாறு குமரிஅனந்தன் கூறினார்.

### நெடுமாறன்

தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் தலைவர் ப.நெடுமாறன் பேசுகையில் கூறியதாவது:—

என்னை தமிழ் இலக்கியங்களில் இழுத்துச்சென்றவர் கண்ணதாசன். அவர் எனக்கு பெரும் துணையாக இருந்தார். அவரதுமறைவு ஈடு செய்ய முடியாததாகும்.

கவியரசு கண்ணதாசனை இழந்து தவிக்கும் அவரது குடும்பங்களை தமிழக முதல்வர் காப்பாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு ப.நெடுமாறன் கூறினார்.

### திருவாரூர் தங்கராசு

திராவிடர் கழகத்தலைவர் திருவாரூர் தங்கராசு பேசுகையில்கூறியதாவது:

திராவிடர் பாரம்பரியத்தில்வந்தவர்கவியரசுகண்ணதாசன். நாம் சோர்ந்திருந்த நேரத்தில் பாடல்களை எழுதி சுறுசுறுப்பாக்கியவர்.

தமிழ் இலக்கியத்தின் சகாப்தம் அண்மையில் முடிவு பெற்றுவிட்டது. இனி கண்ணதாசனை திரும்பப் பார்க்க இயலாது.

கண்ணதாசன் ஒருகாடு. அதில் தேனுண்டவர்கள் உண்டு. பாறைகளில் மிதிபட்டவர்கள் உண்டு. இதில் ஒன்றுமில்லை என்றவர்களும் உண்டு.

சிறுகூடல்பட்டியிலே தோன்றியவர் சிகாகோவில மறைந்திருக்கிறார். வறுமை தேங்கிய நாட்டில தோன்றியவர் வளமான நாட்டில் மறைந்திருக்கிறார்.

அரசவைக் கவிஞரானவுடன் அவரிடம் இந்த நாட்டின் வரலாற்றை கவிதையில் தொகுக்க வேண்டும் என்றேன். தொகுக்கிறேன் என்றார். இன்று அவர் மறைந்து விட்டார்.

இவ்வாறு திருவாரூர் தங்கராசு கூறினார்.

### சுலோசனா சம்பத்

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தின் சார்பில சுலோசனாசம்பத் பேசுகையில் கூறியதாவது:

பாரதியார், பாரதிதாசனுக்குபிறகு ஈடுஇணையற்ற கவிச்சக்கரவர்த்தியாக விளங்கினவர் கண்ணதாசன்.

அரசியலில் பல கட்டங்களில் கருத்து காரணங்களால் மாறுபட்டிருந்தாலும் அவரது மேடைப் பேச்சு கருத்தாழம் மிக்கதாக இனிப்பூட்டும் வகையில் இருந்தது.

62-ம் ஆண்டில் சொல்லின்செல்வர் சம்பத் துவக்கிய தமிழ் தேசிய கட்சியில தளநாயகனாக விளங்கியவர்.

'கோணிப்புளுகன் கோயபல்ஸ்' என்ற நாடகத்தை எழுதி நடித்தார். இன்றைக்கு பாராட்டுங்களை தேடியலைபவர்களைப் பற்றி அன்றே படம் பிடித்து காட்டினார்.

அவரது நினைவாக தமிழக அரசு மணிமண்டபம் அமைக்க இருப்பது தமிழ் பற்றுள்ளவர்கள் மனம நிறைவு கொள்ளச் செய்கிறது.

இவ்வாறு சுலோசனா சம்பத் கூறினார்.

### ராஜாராம் நாயுடு

[illegible] காங்கிரஸ் சார்பில்ராஜாராம்நாயுடு பேசுகையில் கூறியதாவது:

கண்ணதாசன் தமிழக அரசின் அரசவைக் கவிஞராக நியமிக்கப்பட்டது பெரும் ஆறுதலைதருகிறது. வஞ்சகமில்லாத குழந்தை மனம்உள்ளவர். 20 ஆண்டு காலம் அவரோடு நான் பழகியிருக்கிறேன்.

நேரு மறைந்தபோது கடற்கரையில் கூடிய கூட்டத்திற்கிடையே உடனே அவர் ஒரு பாடலை எழுதிக் கொடுத்து சீர்காழி கோவிந்தராசனை பாட வைத்தார். அந்த பாடல் அனைவரையும் அழவைத்து விட்டது. இயற்கையை தட்டி எழுப்பக் கூடியவர் கண்ணதாசன்.

அவரது குடும்பத்திற்கு உதவி செய்து, மருத்துவ உதவி செய்து பிறகு உடலை கொண்டு வந்து தகனம் செய்ய உதவியது தமிழக அரசு. இப்படிச் செய்ய மனம் வருவது பெரிய காரியம். அதனைச் செய்த தமிழக அரசுக்குபாராட்டு தெரிவிக்கிறேன்.

இவ்வாறு ராஜாராம் நாயுடு கூறினார்.

### ஆறுமுகசாமி

ஜனதாக் கட்சி சார்பில் ஆறுமுகசாமி பேசுகையில் கூறியதாவது:—

தன உள்ளத்து கருத்துக்களை யாருக்காகவும் விட்டு வைக்காமல் துணிவோடு சொன்னவர்கண்ணதாசன்.

அவர் பல கட்சிகள் மாறினாலும் முந்தைய கட்சிகள் அவர் மீது விரோதம் கொள்ள முடியவில்லை. காரணம் அவரது பேச்சில் எல்லாம் தமிழின் கவிநயம் இருப்பதுதான். அவர் பேச்சோடு ஒட்டிப்போக முடிந்தது.

ஒப்பற்றகவிஞனை, இலக்கியசெல்வனை, போர்படை தளபதியை இழந்திருக்கிறோம். அவர் விட்டுச் சென்ற கவிதை மூலம் நம்முடன் வாழ்ந்து கொண்டிருப்பார்.

அவருக்கு நிர்மாணிக்க இருக்கும் மணி மண்டபத்தில் கண்ணனின் கோவிலை பின்னணியாக அமைத்தால் அவரது ஆன்மா சாந்தியடையும்.

இவ்வாறு ஆறுமுகசாமி கூறினார்.

### செங்கம் ஜப்பார்

முற்போக்கு முஸ்லிம் லீக் தலைவர் செங்கம் ஜப்பார் பேசுகையில் கூறியதாவது:

ஒரு முறை, ஒரு புலவன் பணக்காரன் செத்ததற்காக அழுதவர்களிடம் போய் 'ஏன் அழுகிறீர்கள்! எல்லாவற்றையும்எடுத்துக் கொண்டுபோய்விட்டாரா வைத்து விட்டுப் போய் விட்டாரா என்று கேட்டார்.

சொத்துக்களை வைத்து விட்டுத் தான் போய்விட்டார் என்றார்கள்.

அதற்காக ஏன் அழுகிறீர்கள். ஒரு புலவன் செத்தால் அழுங்கள். அவன் தன்னோடு தன் புலமையையும் எடுத்துக் கொண்டு போய்விடுவான். அதற்காக புலவன் போய்விட்டால் அழுங்கள் என்றார்.

அதுபோல கவியரசு கண்ணதாசன் தன்னுடன் கவித்திறனையும் எடுத்துக் கொண்டு போய்விட்டார். இனியொரு கண்ணதாசனை நாம் எப்போது பார்ப்போம்?

இவ்வாறு செங்கம் ஜப்பார் கூறினார்.

### அன்பு வேதாசலம்

சரத்பவார் தலைமையிலான காங்கிரஸ் கட்சி சார்பில் அன்பு வேதாசலம் பேசுகையில் கூறியதாவது:

கவிஞர், வாழ்க்கையின் நிலையாமையைப் பற்றி பேசுவார். அவரது பாடலின் மூலம் அவர் புகழ் தமிழ் நிலைத்திருக்கும் வரை நிலைத்திருக்கும்.

ராஜராஜனுடைய பெருங்கோயில் அவன் புகழைக் காட்டுவது போல கவிஞரின் பாடல்கள் காலமெல்லாம் அவரது புகழ்பாடும்.

இவ்வாறு அன்புவேதாசலம் கூறினார்.

### பாலசுந்தரம்

அம்பேத்கார் பேரவைத் தலைவர் வை.பாலசுந்தரம் பேசுகையில்கூறியதாவது:-

கண்ணதாசனின்கவிதைகள் தமிழ் மக்களை ஆட்கொண்டு இதுவரையாரும் பெறமுடியாதபெருமையை அவருக்கு பெற்றுத் தந்திருக்கிறது.

கவியரசுக்கு நமது தமிழக அரசு தந்துள்ள சிறப்புக்கு காலமெல்லாம் தமிழ் மக்கள் நன்றி கூற கடமைப் பட்டிருக்கிறோம்.

கண்ணதாசனைப பற்றி நாம் கவலைப் பட்டுக் கொண்டிருந்த போது தமிழக அரசு அவரை அரசவைக் கவிஞராக ஆக்கியது. அதனால் அவர் பல காரியங்களை செய்ய முடிந்தது.

தமிழை வரி வடிவத்தில அமைப்பதிலே முதல்வர் வழி செய்திருக்கிறார்.

முதல்நூற்றாண்டு முதல் 20ம நூற்றாண்டு வரையுள்ள வரலாற்றை எழுத வழிசெய்ய வேண்டும். அதை தமிழ் பல்கலைக் கழகம் மூலம் செய்ய முடியும் என நம்புகிறேன்.

தமிழ் கவிஞன் இறந்தால் அரசு மரியாதை கிட்டியது இல்லை. பாரதிக்கும் பாரதிதாசனுக்கும் கூட இத்தகைய மரியாதை கிடைக்கவில்லை. ஆனால் கண்ணதாசனுக்குக் கிடைத்தது இதற்காக தமிழ்மக்கள் காலம் முழுதும் நன்றிகூறுவார்கள்.

இவ்வாறு வை.பாலசுந்தரம் கூறினார்.

### சிலம்புச் செல்வர் ம.பொ.சி. உருக்கம்

மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. கூறியதாவது:

ஒரு மாபெரும்இயற்கை கவிஞருக்கு இரங்கல் தெரிவிக்க கூடியிருக்கிறோம். அவர் தொட்ட துறை எல்லாம் துலங்கியிருக்கிறது.

தமிழைக் கொண்டு எத்தனை தொடர முடியுமோ அத்தனையிலும் நிறைந்திருந்தார்.

அவரால் தாக்கப்பட்டவர்கள் ஒருவர் தவறாமல் அவருக்கு அஞ்சலி செலுத்தியிருக்கிறோம். காரணம் அவர் நல்ல தமிழால் தாக்கினார்.

அப்படி ஒரு கவிஞன் இனி பிறந்து தான் வர வேண்டும் என்று சொல்வது மரபு. இருக்கிற இளங் கவிகளில் ஒருவர் அப்படி வருவார் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

பாரதி நூற்றாண்டு விழா கொண்டாட இருக்கிறோம். பாரதியின் வாரிசாக இருக்கிறார் என்று நினைத்தேன். அந்த இடத்தை சூன்யமாக்கி விட்டுப்போய் விட்டார்.

கவிஞரை முதல்வர் ஆயுள்கவிஞராக ஆக்கினார். பாராட்டு விழா ராஜாஜி ஹாலில் நடந்தபோது "ஆயுள் கவிஞராக ஆக்கியிருக்கிறார். ஆயுளை வளர்த்துக் கொள்வது உங்கள் பொறுப்பு" என்றேன். அதைப் பாழாக்கி விட்டுப் போய் விட்டார்.

கடைசி காலத்தில் புலவர் பாரம்பரியம் செய்யாதகாரியத்தைச் செய்து விட்டு, தன காலத்திலேயே இரங்கற் பாடலை பாடி வைத்துப்போய் விட்டார்.

அண்ணா தன் வாழ்க்கையின் முடிவில் தம்பிக்கு கடிதம் எழுதினார். மறுநாள் நான் கேட்டேன், எப்படி எழுதினீர் என்றேன். நான் தெரிந்துதானே எழுதினேன் என்றார்.

அதில் 'தாத்தா நலந்தானா' என்று பேரப்பிள்ளை கேட்டதாக பதிவு செய்து வைத்திருக்கிறார். அதுபோல கண்ணதாசன் கவிதை எழுதினார்.

வாழுகிற கலைஞர்கள், இளம் கவிஞர்களுக்கு வேண்டுகோள். நீங்கள் தமிழைக் காக்க, வளர்க்க வேண்டுமானால் உடலை உயிரைக் காத்துக் கொள்ளுங்கள்.

தமிழுடன் இரண்டறக் கலந்த கண்ணதாசன் நம்முடன் வாழ்கிறார்.

பாரதியார் சுதந்திர சூழ்

(5-ம பத்தி பார்க்க)

(6-ம பத்தி தொடர்ச்சி)

நிலையில் இல்லை. சுதந்திர காலத்தில் கண்ணதாசன் வாழ்ந்தார்.

தமிழ்கூடுசொரணையற்ற காலத்திலே பாரதி வாழ்ந்தான்.

கண்ணதாசனை அரசவைக் கவிஞனாக ஆக்கும்வாய்ப்பு கிடைத்தது.

கவிஞனுக்கு உலகத்தில் தரக்கூடிய ஒரு பெரிய பதவி ஆஸ்தானகவி பதவி தான.

இவ்வாறு சிலம்புச் செல்வர் ம.பொ.சி.கூறினார்.

---

நெல்லை மாவட்டத்தில் 2-வது கட்டமாக

# 12 ஊராட்சி ஒன்றியங்களில் தன்னிறைவுத் திட்டம்

## ரூ. 540 கோடி செலவில் நிறைவேற்றப்படுகிறது

திருநெல்வேலி, அக். 27— திருநெல்வேலி மாவட்டத்தில் 2 வது கட்டமாக, 12 ஊராட்சி ஒன்றியங்களில் 5 40 கோடி ரூபாய் செலவில் தன்னிறைவுத் திட்டம் அமுல் படுத்தப்படுகிறது.

புரட்சித்தலைவரின்ஆட்சியில் தமிழகத்தில் கிராம மக்களின் அடிப்படைத் தேவைகளை நிறைவேற்ற ஊராட்சி ஒன்றியங்களில் தன்னிறைவுத் திட்டம் நிறைவேற்றப்பட்டு வருவது தெரிந்ததே.

திருநெல்வேலி மாவட்டத்தில் முதல் கட்டமாக 5 ஊராட்சி ஒன்றியங்களில், தன்னிறைவுத் திட்டம் நிறைவேற்றப்பட்டது.

தற்போது 2-வது கட்டமாக 12 ஊராட்சி ஒன்றியங்களில், தன்னிறைவுத் திட்டம் 5. 40 கோடி ரூபாய் செலவில் நிறைவேற்றப்பட்டு வருகிறது.

மாவட்டத்தில் மிகவும் பின்தங்கிய நிலையில்உள்ள ஊராட்சி ஒன்றியம் எனக் கருதப்படும், கயத்தாறு ஊராட்சிஒன்றியத்திலும், தற்போது தன்னிறைவுத் திட்டம் அமுல் படுத்தப்படும். 12 ஊராட்சி ஒன்றியங்களில் இதுவும் ஒன்றாகும்.

சுமார் 50 லட்சரூபாய் மதிப்பீட்லானடி திட்டங்கள் இந்த ஊராட்சி ஒன்றியத்தில் நிறைவேற்றப்பட்டுவருகின்றன.

கோவில்பட்டி நகருடன் பல்வேறு கிராமங்களை இணைக்கும் 4 கிலோமீட்டர் இணைப்புச்சாலை ஒன்றை போட 27 ஏக்கர் நிலத்தை சிலர் அரசுக்கு இலவசமாக வழங்கியுள்ளனர்.

தன்னிறைவுத்திட்டம் அமுல்படுத்தப்பட்டு வரும் 12 ஊராட்சி ஒன்றியங்களிலும் திட்டப் பணிகள்விரைவாக நடந்து வருகின்றன.

---

கள்ள மார்க்கெட்டில் பாமாலின் எண்ணை விற்ற

## ஊழியர் வேலை நீக்கம்

கடலூர், அக். 27— சிதம்பரம் சூப்பர் மார்க்கெட்டில் பாமாலின் எண்ணையை கள்ள மார்க்கெட்டில் விற்றதாக அக்கடை ஊழியர் கண்ணசன் வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளார். 3000ரூபாய் முன் பணமாக பெற்றுக்கொண்டு குமார் என்பவரிடம் அவர் 380 கிலோ பாமாலின் எண்ணையைகள்ளத்தனமாக விற்றுவிட்டாராம். இது குறித்து சிதம்பரம் உதவி கலெக்டர் ஷிலாராணிமற்றும் உயர் அதிகாரிகள் கண்ணசனிடம் விசாரணை செய்து அவரை வேலை நீக்கம் செய்தனர். மேற்கண்ட 380 கிலோ பாமாலின் எண்ணை கைப்பற்றப்பட்டது.

---

## பெரியார் அண்ணா பிறந்தநாள் விழா

மதுரை, அக். 27— தமிழக அரசின் சார்பாக ராமநாதபுரம் மாவட்ட மக்கள் தொடர்பு துறையினரால் தந்தைபெரியார், அறிஞர் அண்ணாவின் பிறந்த தின விழா சிறப்பாக கொண்டாடப்பட்டது.

மாவட்டஆட்சித்தலைவர் செல்லமுத்து தலைமை வகித்தார். அங்கு நடைபெற்ற கருத்தரங்கில் கவிஞர்கள் ராஜேந்திரன், முத்துசாமி, சுபாஷ்சந்திரபோஸ், லட்சுமணப்பெருமாள், பகீரதன், நாகராஜன் ஆகியோர் கலந்துகொண்டு பேசினர்.

---

ஓமியோபதி இலவச மருத்துவமனை

## அமைச்சர் அண்டே திறந்து வைத்தார்

கடலூர், அக். 27— நெல்லிக்குப்பத்தில் அறிஞர் அண்ணா இலவச ஓமியோபதி மருத்துவமனையை அமைச்சர் அண்டே திறந்து வைத்தார். இவ் விழாவிற்கு பாபு கோவிந்தராசன் எம்.எல்.ஏ. தலைமை வகித்தார் மற்றும் ஜனார்த்தனம், சக்தி சிவபூஷணம், வேலாயுதம், தமிழ் நாடு ஓமியோபதி கௌன்சில் உறுப்பினர் டாக்டர் ஜெயராவ், டாக்டர் குருவரபிரசாத், டேனியல் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினர்.

## அமைச்சர் ராஜாமுகமது நிகழ்ச்சிகள்

அக். 30ந் தேதி காலை 7.15 மணி மதுரை 31ந் தேதி காலை நெல்லை, மாலை 4 மணி மதுரை.

## விவசாயிகள் குறை தீர்க்கும் நாள்

மதுரை, அக். 27— இராமநாதபுர மாவட்டத்திலுள்ள விவசாய சங்கங்கள் மற்றும்விவசாயிகளின் பொதுப்படையான கோரிக்கைகள் சம்பந்தமாக பரிசீலனை செய்யும் கூட்டம் அடுத்த மாதம் (நவம்பர்)21ந் தேதி காலை 11 மணி அளவில ராமநாதபுர மாவட்ட ஆட்சியாளரின் அலுவலகத்தில் நடைபெறுகிறது. விவசாய சம்பந்தப்பட்ட கோரிக்கைகளை "விவசாயிகள் குறை தீர்க்கும் நாள்" என்று கவர் மீதுஎழுதி இம்மாதம் (அக்டோபர்) 27ந் தேதிக்குள் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திற்கு அனுப்பவேண்டும் என்று ராமநாதபுர மாவட்ட ஆட்சித்தலைவர் தெரிவித்துள்ளார்.

## குமரி மாவட்ட இந்திரா காங்கிரசார் கழகத்தில் இணைந்தனர்

கன்னியாகுமரி, அக் 27- கன்னியாகுமரி மாவட்டம் காட்டுக்குளம் கிராமப் பகுதியைச் சேர்ந்த இந்திரா காங்கிரஸ் செயலாளர் சுயம்புலிங்கம், பொருளாளர் அப்பாவு நாடார் உட்பட 35 பேர் அக்கட்சியிலிருந்து விலகி கழகமாவட்டச்செயலாளர் ராஜரத்தினம் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர். அதேபோல் குமரி மாவட்டம் மேல்புறம் ஒன்றியத்தைச் சேர்ந்த ஜனதாக் கட்சி தலைவர் தர்மராஜ் உட்பட 40 பேர் அக்கட்சியிலிருந்து விலகி கழக மாவட்டச் செயலாளர் நாகரத்தினம் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

# இலங்கை தமிழர் பிணம் வந்ததா?

# டெல்லி மறுப்பு

## தி. மு. க. எம். பி. எழுதிய கடிதத்தால் கருணாநிதி மோசடி அம்பலம்

கோயமுத்தூர், அக். 28- இலங்கைத் தமிழர்கள் கொலை செய்யப்பட்டு பிணங்கள் தமிழக கடற்கரையில் ஒதுங்கியதாக கருணாநிதி அடித்த ஸ்டண்ட் பிரச்சாரம் பொய் என்பது அம்பலமாகியுள்ளது. அப்படி சடலங்கள் ஏதும் ஒதுங்கவில்லை என்று வெளி விவகார அமைச்சர் நரசிம்மராவ் தெளிவு படுத்தியுள்ளார்.

''இலங்கைத் தமிழர்கள் படுகொலை செய்யப்பட்டு கடலில் போடப்பட்டுள்ளனர்; சடலங்கள் தஞ்சை மாவட்டம், கோடியக்கரை அருகே கடலில் ஒதுங்கியுள்ளன'' என்று கூறி கருணாநிதி மோசடிப் பிரச்சாரம் செய்து வந்துள்ளார்.

தமிழக அரசு அதிகாரிகள் போய் விசாரணை நடத்தி அப்படி சடலங்கள் ஏதும் ஒதுங்கவில்லை என்றும் அறிவித்தனர். என்றாலும் கருணாநிதி விடவில்லை

முரசொலி வாயிலாக மோசடிப் பிரச்சாரங்களைக் கருணாநிதி தொடர்ந்து நடத்தி வந்தார்.

என்றாலும் திருப்தி அடையாமல், நாடாளு மன்ற தி. மு. க. உறுப்பினர் இரா. மோகன் வெளிவிவகார அமைச்சர் பி. வி. நரசிம்மராவுக்கு இதுபற்றிக் கடிதம் எழுதினார். இலங்கைத் தமிழர் பிணங்கள் தமிழக கடற்கரையில் ஒதுங்கியது உண்மையா என்ற மோகனின் கேள்விக்குப் பதிலளித்து வெளி விவகார அமைச்சர் நரசிம்மராவ் கடிதம் எழுதியுள்ளார்.

### அய்யா... கருணாநிதி

அதில் கூறி இருப்பதாவது:-

வேதாரண்யம்-கோடியக்கரை ஆகிய கடற்கரைப் பகுதிகளில் அரசு அதிகாரிகள் தீவிரமாகச் சோதனை நடத்தினார்கள். இலங்கைத் தமிழர் பிணங்கள் அங்கே ஒதுங்கின என்று கூறியதற்கு எந்த ஆதாரமும் கிடைக்கவில்லை.

அங்கே கிடைத்த பழைய எலும்புக்கூடுகளை வைத்துக் கொண்டு, இலங்கைத் தமிழரின் பிணங்கள் என்று கூறுவது தவறு.

இலங்கையில் நடந்த சம்பவங்கள் அவர்களது உள் நாட்டு விவகாரம் என்ற போதிலும், இது சம்பந்தமாக இலங்கை அரசுடன் இந்திய அரசு தொடர்பு கொண்டு வருகிறது. இந்த பிரச்சினையை கடுமையாகக் கவனிப்பதாகவும், சகஜநிலை ஏற்பட பாடுபடுவதாகவும் இலங்கை உறுதி அளித்துள்ளது.

வந்துள்ள தகவலைப் பார்க்கும்போது இலங்கையில் நிலைமை அபிவிருத்தி அடைந்துள்ளது. சமீபத்திய சம்பவத்தில் பாதிக்கப் பட்டவர்களுக்கு மறுவாழ்வு அளிக்கும் பணியில் இலங்கை அரசு ஈடுபட்டுள்ளது.

இவ்வாறு அந்தக் கடிதத்தில் நரசிம்மராவ் கூறியுள்ளார்.

### கருணாநிதி வருத்தம் தெரிவிப்பாரா?

பொய்த் தகவலைக் கொடுத்த கருணாநிதி, மத்திய அமைச்சரின் மறுப்புக்குப் பிறகாவது ''நான் பொய்த் தகவல் கொடுத்து விட்டேன். தவறுக்கு வருந்துகிறேன்'' என்று அறிவிப்பாரா என்ற கேள்வி எழுந்துள்ளது.

---

நவம்பரில்

## பல்கேரியாவுக்கு பிரதமர் இந்திராகாந்தி பயணம்

புதுடெல்லி, அக். 27— நவம்பர் மாதத்தில் பிரதமர் இந்திராகாந்தி, பல்கேரிய நாட்டில் அரசு முறையில் சுற்றுப் பயணம் மேற்கொள்ள உள்ளார்.

இத்தகவலை வெளிவிவகாரத் துறையைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் தெரிவித்துள்ளார்.

பல்கேரிய நாட்டு ஜனாதிபதியும், அந்நாட்டு கம்யூனிஸ்ட் கட்சி செயலாளரும் பிரதமர் இந்திராகாந்தியை அந்நாட்டுக்கு வருமாறு அழைத்திருந்தனர்.

---

## தஞ்சை மாவட்டத்தில் பலத்த மழை

தஞ்சாவூர், அக். 27- தஞ்சை மாவட்டத்தில் பலத்த மழை பெய்த வண்ணம் இருக்கிறது. இதனால் குறுவை அறுவடை பாதித்துள்ளது.

தொடர்ந்து மழை பெய்து வருவதால் மேட்டூரில் இருந்து விடப்படும் தண்ணீர் அளவு குறைக்கப்பட்டுள்ளது.

தினமும் 10 ஆயிரம் கன அடி தண்ணீர் விடப்பட்டு வந்தது. மழை பெய்து வருவதால் இந்த அளவு பாதியாகக் குறைக்கப்பட்டுள்ளது.

சிதம்பரம் காட்டுமன்னார் கோயில் பகுதியில் 3 நாட்களாக பலத்த மழை பெய்து வருகிறது.

3 நாட்களில் சிதம்பரத்தில் 280 மில்லி மீட்டர் மழை பெய்துள்ளது.

இந்த மழையால் குறுவை அறுவடை ஓரளவு பாதிக்கப்பட்டு இருந்தாலும் சம்பா விளைச்சலுக்கு இந்த மழை பெரிதும் உதவும். விளைச்சல் அமோகமாக இருக்கும் என்று தஞ்சை விவசாயிகள் கருதுகிறார்கள்.

---



---



---

## திருப்பத்தூர் அருகே நக்சல்பாரி ஒருவர் கைது

திருப்பத்தூர், அக். 27- வடஆற்காடு மாவட்டம் திருப்பத்தூர் அருகே உள்ள தாத்தக்காலில் பிரபல நக்சல்பாரி கார்னெல் (வயது-24) கைது செய்யப்பட்டார்.

வன்முறை சம்பவங்கள் பற்றிய 4 வழக்குகள் சம்பந்தமாக கார்னெல்லை போலீசார் வலைவீசி தேடி வந்தனர். அந்தப்பகுதியில நடந்த பல வன்முறை சம்பவங்களுக்கும் கார்னலுக்கும் நிரம்ப தொடர்பு உண்டு என்று போலீசார் கூறினர்.

---

தனியார் கம்பெனிகளில் வேலை வாய்ப்பு:

## இட ஒதுக்கீடு பற்றி சட்டம் கொண்டுவர கழக அரசு யோசனை



திருச்சி, அக் 27—தனியார் கம்பெனிகளில் வேலைவாய்ப்புக்காக இட ஒதுக்கீடு செய்வது பற்றி சட்டம் ஒன்றை கழக அரசு கொண்டுவரவிருக்கிறது என்று தொழிலமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்திருக்கிறார்.

மத்திய மாநில அரசுகள் மற்றும் அரசு நிறுவனங்களில் வேலை வாய்ப்பு அளிப்பதில் பல்வேறு பிரிவினரின் உரிமைப்படி இட ஒதுக்கீடு செய்யப்பட்டு வருகிறது. பிற்படுத்தப்பட்டோர், தாழ்த்தப்பட்டோர், சிறுபான்மையினர் என்ற அடிப்படையில் இடம் ஒதுக்கீடு செய்யப்படுகிறது. இதற்கான மத்திய மாநில அரசு சட்டங்கள் நடைமுறையில் இருந்து வருகின்றன.

அண்மையில் புதுக்கோட்டை மாவட்டத்தில் கந்தர்வக்கோட்டை என்ற புதிய தாலுக்கா துவக்க விழாவிற்கு தலைமை வகித்துப் பேசிய தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு இது போன்ற இட ஒதுக்கீடுகள் தனியார் கம்பெனிகளிலும் ஏற்படுத்தப்படும என்று கூறினார்.

அவர் மேலும் குறிப்பிட்டதாவது:

அரசாங்க அலுவலகங்கள் மற்றும் நிறுவனங்கள்-சார்புடைய தொழிற்சாலைகள் ஆகியவற்றில் வேலைவாய்ப்புக்காக இட ஒதுக்கீடு செய்யும் சட்டம் அமுலில் இருக்கிறது.

### சட்டம் வருகிறது

இதைப் போலவே தனியார் நிறுவனங்கள மற்றும் கம்பெனிகளில் வேலை வாய்ப்பு அளிப்பதில் இட ஒதுக்கீடு செய்வது பற்றி சட்டம் ஒன்றைத் தமிழக அரசு ஏற்படுத்த இருக்கிறது.

தனியார் நிறுவனங்களில் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு 50 சதவிகிதமும் தாழ்த்தப்பட்ட மற்றும் மலைஜாதி வகுப்பினருக்கு 18 சதவிகிதமும் வேலைவாய்ப்பு அளிப்பதில் இட ஒதுக்கீடு செய்யப்படவேண்டும். இதுபற்றி தமிழக அரசு சட்டம் இயற்றவிருக்கிறது.

### தவறானது

தற்போது தனியார் நிறுவன சொந்தக்காரர்கள் பெரும்பாலும் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கே வேலை வாய்ப்பு தருகிறார்கள். ஒரு கம்பெனி உரிமையாளர் தன்னுடைய வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கே வேலை வாய்ப்பு அளித்து வருகிறார் என்பது கண்கூடு.

உதாரணமாக, ஒரு முன்னேறிய வகுப்பைச்சேர்ந்த ஒரு தனியார் கம்பெனியில அந்த முன்னேறிய வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கே வேலை வாய்ப்பு அளிக்கப்படுகிறது. இது தவறானது. வேலை வாய்ப்பு மக்கள் அனைவருக்கும் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

---

1060 ஏழை ஆதிதிராவிடர்களுக்கு

## ரூ.25,000 மதிப்புள்ள ஆடைகள்: எஸ். டி. எஸ். நன்கொடை



தஞ்சாவூர், அக். 27— பல்வேறு பொதுக் கூட்டங்களிலும், அரசு நிகழ்ச்சிகளிலும் அமைச்சர் எஸ். டி.எஸ்.சுக்கு பட்டு வேட்டிகளும், சால்வைகளும், வேட்டிகளும், துண்டுகளும் அளிக்கப்பட்டன.

அவை ஏழை ஆதி திராவிட மக்களுக்கு நன்கொடையாகக் கொடுக்க வேண்டும் என்று தஞ்சை மாவட்டக் கலெக்டரிடம் ஒப்படைக்கப்பட்டன.

பட்டுக்கோட்டையில் நடைபெற்ற அரசு விழாவில் மத்திய நிதியமைச்சர் ஆர். வெங்கட்ராமன் ஆதி திராவிட மக்களுக்கு இவைகளை வழங்கினார்.

பட்டு வேட்டிகளும் சால்வைகளும் பல இருந்தன. அவற்றில் சிலவற்றின் மதிப்பு ஒன்று ரூ. 350க்கு மேல் இருக்கும்.

இவைகளின் மொத்த விலை மதிப்பு ரூ.25 ஆகும்.

இம்மாதிரி ஆதிதிராவிட மக்களுக்கு தனக்கு வரும் பொருட்களை வழங்குவது பாராட்டுக்குரியது என்று மத்திய நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் பாராட்டினார்.

கடந்த இருவருடங்களுக்கு முன்பு வேதாரண்யம அருகே மரவக்காடு என்ற ஊரில் நடைபெற்ற அரசு விழா ஒன்றில் தனக்குக் கிடைத்த பல ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள ஆடைகளை முதலவர் புரட்சித்தலைவர் மூலம் ஏழை ஆதிதிராவிடர்களுக்கு அமைச்சர் எஸ். டி. எஸ். வழங்கியது நினைவுகூரத் தக்கது.

### அமைச்சர் எஸ்.டி.எஸ்.

வருவாய்த்துறை அமைச்சர்கள் எஸ். டி. எஸ். விழாவில் கலந்து கொண்டு கந்தர்வக்கோட்டை புது தாலுக்காவை துவக்கி வைத்தார். புதுக்கோட்டை மாவட்டத்தில் இதுவரை 6 தாலுக்காக்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. கந்தவர்க்கோட்டை தாலுக்காவையும் சேர்ந்து ஏழாவது தாலுக்கா உருவாக்கப்பட்டுள்ளது என்று கூறினார்.

---



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras 600 029

Editor: E. PARASURAMAN

# அண்ணா



## அமைச்சர் எஸ். டி. எஸ். நிகழ்ச்சிகள்

வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். சுற்றுப்பயண நிகழ்ச்சிகள் வருமாறு:-

28ந்தேதி காலை திருவாரூர், காலை 10 மணி வேர்க்குடி ஊராட்சி ஒன்றிய துவக்கப் பள்ளிக் கட்டிட துவக்க விழா.

காலை 11-30 மணிகூத்தாநல்லூர் பேரூராட்சி அங்காடி கட்டிட திறப்பு விழாமாலை 3 மணி பெருகவாழ்ந்தான் ஊராட்சி மன்ற அலுவலக கட்டிடத் திறப்பு விழா—தாய் சேய் நல விடுதி திறப்பு விழா, கிராமிய மருந்தகத்திறப்பு விழா.

மாலை 5 மணி: மன்னார்குடி நகராட்சி ஒருங்கிணைந்த நகர்ப்புறவளர்ச்சித் திட்ட துவக்கவிழா.



பிணத்தின்

## காது, இதயம், கண்களை எடுத்து பயன்படுத்த சட்டம்

### இலங்கை நிபுணர் கோரிக்கை

சென்னை, அக். 26—இறந்தவரின் சடலத்திலுள்ள உறுப்புக்களை எடுத்து நோயாளிகளுக்குப் பயன்படுத்த சட்டம் கொண்டுவர வேண்டும் என்று இலங்கை கண் வங்கித் தலைவர் டாக்டர் ஹட்சன் கேட்டுக்கொண்டார்.

கண் சிகிச்சையில் அதிக சேவை செய்ததற்காக இலங்கை டாக்டர் ஹட்சன் சில்வாவுக்கு சென்னையிலுள்ள கண் ஆராய்ச்சி நிலையத்தின் சார்பில் விருது வழங்கப் பட்டது. இந்த நிலையத்தின் தலைவர் டாக்டர் அகர்வால்.

மக்கள் நல் வாழ்வுத் துறை அமைச்சர் டாக்டர் ஹண்டே இந்த விருதை வழங்கினார். தீவிர கண் சிக்ச்சை திட்டத்தைச் செயல்படுத்த அரசு ஏற்பாடுகள் செய்துவருகிறது என்று அமைச்சர் டாக்டர் ஹண்டே கூறினார்.

டாக்டர் ஹட்சன் சில்வா பேசுகையில் "இறந்தவரின் சடலத்திலுள்ளஉறுப்புக்களைஎடுத்து நோயாளிகளுக்குப் பொருந்துவதற்கு வகை செய்யும் சட்டத்தை தமிழ் நாடு அரசு இயற்ற வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

செவிப்பறை, இருதயத்திலுள்ள வால்வுகள், சிறு நீரகம் ஆகியவை அதிக அளவில் தேவைப்படுகிறது. இறந்தவர்களின் இந்தஉறுப்புக்களைஎடுத்து, இருப்பவர்களுக்குப் பயன் படுத்தலாம். இன்னும் விஞ்ஞானம் முன்னேற முன்னேற இறந்தவரின் அங்கத்தின் பெரும் பகுதியை உயிரோடிருப்பவர்களுக்குப் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்று டாக்டர் ஹட்சன்சில்வா கூறினார்.

ஐதராபாத்தில்

## கைத்தடியில் துப்பாக்கிகுண்டு 16 பயங்கர ஆயுதங்களுடன் ஆசாமி கைது

ஐதராபாத், அக். 27—பதினாறு பயங்கர ஆயுதங்களுடன் ஒரு ஆசாமியை ஐதராபாத் போலீசார் கைது செய்தனர்.

இந்த ஆசாமி வைத்திருந்த கைத்தடியில் 24 துப்பாக்கிக் குண்டுகளும் இருந்தது கண்டுபிடிக்கப் பட்டது.

கைதான ஆசாமியின் பெயர் எல்லையா. காந்தி நகர் பகுதியில் போலீசார் எல்லையாவை கைது செய்தனர்.

இந்த பயங்கர ஆசாமியிடம் இருந்து துப்பாக்கி வாள், ரம்பம் கைத்துப்பாக்கி, பட்டாகத்தி போன்ற 16 பயங்கர ஆயுதங்கள் கைப்பற்றப் பட்டன.

ஒரு கைத்தடியினுள் 24 துப்பாக்கிக் குண்டுகளும் இருந்தன.

ரூ. 2 லட்சம் மதிப்புள்ள ரயில்வே சாமான்களை திருடிய வழக்கில் சம்பந்தப்பட்டவர் அவர்.

எல்லையா நடத்தி வந்த ஒரு சூதாட்ட விடுதியில் இருந்து போலீசார் 10 பேர்களை கைது செய்து ரூ. 3213 ரொக்கத்தையும் கைப்பற்றினார்கள்.



## சந்தா விவரம்

| | | | |
|---|---|---|---|
| 1 | வருடச் சந்தா தொகை | ரூ. | 145 |
| 6 | மாதச் சந்தா தொகை | ரூ. | 74 |
| 3 | மாதச் சந்தா தொகை | ரூ. | 37 |

3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

நிர்வாகி:
"அண்ணா"
34, நெல்சன் மாணிக்கம் சாலை
அமைந்தகரை, : : சென்னை-29



நெல்லிக்குப்பத்தில்

## கழகப் பொதுக் கூட்டம்

கடலூர், அக். 27—நெல்லிக்குப்பம் அண்ணா திடலில் நடை பெற்ற கழகப் பொதுக்கூட்டத்தில் அமைச்சர் அண்டே கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார். மற்றும் ஹிராசந்த் எம். பி, முன்னாள் அமைச்சர் ராஜாங்கம் அன்பரசன், சக்தி சிவபூஷணம், வீரராகவன், சஞ்சலமல்லிவண்ணு வேலாயுதம், பக்கிரிசாமி, மற்றும் பலர் கலந்துகொண்டு பேசினர். இதற்கு முன்பாக அமைச்சர் அப்பகுதியிலுள்ள தொழிலாளர் நல அரசு மருத்துவ மனையையும், பொது மருத்துவமனையையும்பார்வையிட்டார்.

பம்பாயில் கடத்தல்

## ரூ. 20 லட்சம்: 2 சுங்க அதிகாரிகள் கைது

பம்பாய், அக். 27—போலி கம்பெனி ஒன்றின் பெயரில் சுமார் 20 லட்சம் ரூபாய் பெறுமானம் உள்ள வெளிநாட்டுப் பொருள்கள் பம்பாய் துறைமுகத்தில் இறக்குமதி செய்யப் பட்டது.

சுமார் 12 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள ரேடியோ, டேப்ரிக்கார்டர் காசட்டுகள் மற்றும் சுமார் 8 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள நம்பர் மெஷின்கள் இந்த இறக்குமதியில் இடம் பெற்றிருந்தன.

இதுபற்றி தீவிர புலன் விசாரணை செய்த பம்பாய் சுங்க இலாக்கா உயர் அதிகாரிகள் அந்த இலாக்காவைச் சேர்ந்த 2 சுங்க அதிகாரிகள் மற்றும் 4 பேர்களை கைது செய்தனர். இது பற்றி மேலும் விசாரணை நடைபெற்று வருகிறது.

தலைமைக் கழக அறிக்கை எண் 173.81

## கழக செயற்குழு உறுப்பினர்களுக்கு...

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக

### செயற்குழு கூட்டம்

2-11-81 அன்று காலை 10 மணி அளவில்

கழக அவைத்தலைவர்
உயர்திரு. ஈ. வெ. அ. வள்ளிமுத்து அவர்கள்
தலைமையில்

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள்
முன்னிலையில் சென்னையில் கூடும்.

அழைப்பிதழைப் பெறுகின்ற செயற்குழு உறுப்பினர்கள்,
தவறாமல் கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

ப. உ. சண்முகம்
பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

சென்னை-14
25-10-81

குறிப்பு: இடம் பின்னர் அறிவிக்கப்படும்